உ

ஓம் தத் ஸத்

# வேதாந்த சாரமென்னும்
# பிரமானந்தக் கீர்த்தனைகள்

இயற்றியவர்கள்


ஸ்ரீமத் ஸ்ரீ விவேகானந்த ஸ்வாமிகளும்
சிஷ்யர்களும்




ஸ்ரீமத் ஸ்ரீ விவேகானந்த ஸ்வாமிகள்


வெளியீடு

மதுரை ஸாது ஸேவா ஸமாஜம்
ஸ்ரீ விவேகானந்த ஸ்வாமிகள் மடாலயம்
76, திருப்பரங்குன்றம் ரோடு,
மதுரை - 11.
1990

விலை ரூ. 1-00

உ

ஸ்தாபிதம் : 1915 ஓம் தத்ஸத் ரிஜிஸ்டர் : 21 of 44

# மதுரை ஸாது ஸேவா ஸமாஜம்
# ஸ்ரீ விவேகானந்த ஸ்வாமிகள் மடாலயம்

76, திருப்பரங்குன்றம் ரோடு, மதுரை-11.

அலுவலகம்:''ஆனந்தாஸ்ரமம்''42,மஹால்1வதுதெரு, மதுரை-1.

நமது மடாலயத்தில் அதிஷ்டான சிவலிங்க மூர்த்தியாக விளங்கி அருள்பாலித்துக் கொண்டிருக்கும் நம் மடாலயத்தின் ஸ்தாபகர் ஸ்ரீ பரமஹம்ஸ, பரிவ்ராஜகாச்சார்ய ச்ரோத்ரிய பிரஹ்ம நிஷ்ட





ஸ்ரீமத் ஸ்ரீ விவேகானந்த சுவாமிகள்

அவதாரம் 1837 மோக்ஷம் 1915

# முன்னுரை

மனிதனின் பெருமை அவனது பணம், பதவி தொழில், உடல் ஆற்றல் இவற்றில் இல்லை. ஆன்மீகச் செல்வத்தில் தான் உண்டு. சமயம் வேறு, ஆன்மீகம் வேறு ஆன்மீகத்திற்கு அடிப்படை நமது சனாதன தர்மம். இது வேதங்களில் கூறப்படுகிறது. வேதத்தின் அந்தமான வேதாந்தம் பிரஸ்தானத்ரயம் என்று சொல்லப்படுகிற 1. உபநிஷதங்கள் 2. பிரம்ம சூத்ரம் 3. பகவத்கீதை என்கிற மூன்று நூல்களில் உள்ளது.

இந்த பரஞானந்தான் மனிதன் உய்யும் வழியைக் காட்டுகிறது. தர்மம், பக்தி, யோகம், ஞானம் என்ற நான்கு பாதைகளில் சிறந்தது ஞானம். இந்த ஞானத்தை வழங்கும் வகையில் உள்ள நூல்கள் அதிகமாக கிடைப்பதில்லை. எனவே படிக்கப்படுவதில்லை.

இந்த் வேதாந்த ஞானம் நம் பாரத நாட்டுச் சொத்து. இது தற்போது வட பாரதத்தில் உள்ளது போல் தென் பாரதத்தில் சிறக்கவில்லை. தென்னாட்டிலும் ஒரு சில இடங்களில் மட்டும் இது காணப் பெறுகிறது. பாரம்பரிய மிக்க ''கோவிலூர் மடம்'' பிரசித்தி பெற்றது.

மதுரையில் நம் சமூகத்தில் சில ஸ்தாபனங்கள் இந்த வேதாந்தத்தை பரப்பும் தொண்டை செய்து வருகின்றன. உதாரணமாக ஸ்ரீ விவேகானந்த மடாலயம். ஞானானந்த மடம், வேதாந்த சிரவண சங்கம், ஸ்ரீமதிகள் வேதாந்த சாது சங்கம், சங்கரமடம், சித்தபீடம், கீதா பவனம், போன்றவை. இவற்றில் திருப்பரங்குன்றம் சாலையில் உள்ள ஸ்ரீ விவேகானந்த ஸ்வாமிகள் மடாலயத்தையும் அருப்புக்கோட்டை ரோட்வில்லாபுரத்தில் உள்ள ஸ்ரீ பிரம்மானந்த ஸ்வாமிகள் மடாலயத்தையும் ஸ்தாபித்த நம் ஸ்ரீ விவேகானந்த ஸ்வாமிகளின் சரித்திரம் இப்போது வெளியிடப்படுகிறது. கையெழுத்துப் பிரதியாக இருந்து வரும் சுமார் நூறு பக்கங்கள் கொண்ட நூலிலிருந்து சுருக்கமாக வெளியிடப்படுகிறது.

ஸ்ரீ விவேகானந்த ஸ்சுவாமிகளும். அவர்களுடைய சிஷ்யர்களும் அவ்வப்போது இயற்றிய பாடல்களை ''பிரம்மானந்த கீர்த்தனைகள்'' என்ற பெயரில் தொகுத்து கொடுக்கப்பட்டவைகளில் பதினாறு பாடல்கள் வெளியிடப் படுகின்றன. ஸ்ரீ விவேகானந்த ஸ்வாமிகளின் ஜெயந்தி விழா பிரதி வருஷம் ஆவணி மாதம் பூராட நட்சத்திரம் அன்று விமரிசையாக நடைபெற்று வருகிறது.

இந்த சரித்திரத்தை ஒழுங்காகதொகுத்து மிகுந்த பிரயாசையுடனும் சிரத்தையுடனும் எழுதிய ''தெய்வீக கைங்கர்ய வித்யா விஷாரத்'' உயர்திரு. கந்தாள்ளு. *K.K.* ராதாகிருஷ்ணய்யர் அவர்களுக்கும், இதனை எடிட் செய்ய உதவியும், உறுதுணையாமாயும் இருந்த திருநகர் சீதாலெக்ஷிமி பெண்கள் மேல்நிலைப்பள்ளி முன்னாள் ஆசிரியையும், ஸ்ரீமதிகள் வேதாந்த சாது சங்கம் காரிய தரிசியுமான மதுரை திருமதி. *T.R.* காயத்திரி அம்மையார் B.A.R.B.P., பிரசாரக் அவர்களுக்கும் மற்றும் இவ்வரலாற்றை எழுத பெரும் உதவியாய் இருந்த கைப்பிரதியை எழுதிய நம்மடாலய சுவாமிகள் ஸ்ரீ அத்வைதானந்த பாரதி ஆச்சார்யசுவாமிகளுக்கும் இதை நல்லமுறையில் அச்சிட்டு உதவிய ஸ்ரீ தனலட்சுமி பிரிண்டர்ஸ், அவர்களுக்கும் நம் மனமார்ந்த நன்றியை தெரிவித்துக்கொள்கிறோம்.

இப்படிக்கு,

**நிர்வாகஸ்தர்கள்,**

**ஸாது ஸேவா சமாஜம்,**

**ஸ்ரீ விவேகானந்த மடாலயம்,**

**மதுரை.**

ஓம்
ஸ்ரீ கணேஸாய நம:
ஸ்ரீ பிரம்மானந்த குருவே நம:
ஸ்ரீ விவேகானந்த சுவாமினே நம:

# ஸ்ரீமத் ஸ்ரீ விவேகானந்த சுவாமிகளின் புண்ய வரலாறு

*வாஸுதே³வ மஹா யோகி³ம் விவேகானந்த³ நாமகம் |*
*மத்³கு³ரும் தமஹம் வந்தே³ ஸர்வபாப விநாசகம் ||*
*ப்³ரஹ்மானந்த³ குரோர் சிஷ்யம் பரமானந்த ³ தா³யகம்|*
*ஸத்³ கு³ ரும் தமஹம் வந்தே³ விவேகானந்த³ மூர்த்தினம்||*

ஸ்ரீ விவேகானந்த ஸ்வாமிகள், பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய, சுரோத்திரிய, பிரஹ்மநிஷ்டர், பிரஹ்மானந்த ஸ்வாமிகளின் சிஷ்யர், பூர்வாஸ்ரமப் பெயர் வாசுதேவர். இவருடைய சரித்திரம் மிகவும் மகிமை வாய்ந்தது, புண்ணிய வடிவானது, பாக்கியமானது, சகல துன்பங்களைப் போக்க வல்லது, சகல ஐஸ்வர்யங்களைக் கொடுக்கவல்லது.

*யத³ா யத³ா ஹி த⁴ர்மஸ்ய க்³லாநிர்ப⁴வதி ப⁴ாரத|*
*அப⁴யுத்த²ான மத⁴ர்மஸ்ய தத ³ாத்மானம்ஸ்ருஜாம்யஹம்||*

என்ற வாக்கியத்தின்படி ஒவ்வொரு காலத்தில், ஒவ்வொரு தேசத்தில், ஒவ்வொரு மரபில், ஒவ்வொரு ஸ்ரேயஸ்ஸான தர்மத்தைக் காப்பாற்றும் பொருட்டுப் பகவான் தானுகவோ, தனது பரிவாரங்களுடனுகவோ உலகில் அவதரித்து, ஸாது ஜனங்கள் உய்யும்பொருட்டு, வழி காட்டியும், உபதேசம் செய்தும், அவதார நோக்கம் பூர்த்தியானவுடன் அந்தர்த்தானமாய் விடுவது சகஜம் இதே மாதிரி வசிஷ்டாதி மகரிஷிகளும் உலகத்தில் மகான்களாகத் தோன்றி, செய்ய வேண்டிய காரியங்களைச் செவ்வனே செய்து விட்டு மறைந்து விடுகிறுர்கள்.

இப்பேர்ப்பட்ட மஹிமை வாய்ந்த மஹரிஷி பரம்பரையில் அவதரித்தவர்களில் நமது ஸ்ரீ விவேகானந்த ஸ்வாமிகளும் ஒருவராவார்.

தந்தை கைலாயபதி பரமசிவன், அன்னை பராசக்தி இவர்களின் அனுக்ரஹம் பெற்று, அவர்களுடைய திருக் குமாரராகிய சுப்பிரமணிய சுவாமி, கலி 4938 ஹே விளம்பி வருஷம் ஆவணி மாதம் 27ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை சுக்ல பக்ஷம், துவாதசி திதி, பூராட நட்சத்திரம், சிம்ம லக்கினம், ஸௌபாக்கிய யோகம் கூடிய சுபயோக சுபதினத்தில் காலை 5½ மணிக்கு, சௌராஷ்ட்ர விப்ர குலத்தில் சாலி கோத்திரத்தில் நாகராஜ, நாகமணி என்ற தம்பதியர்க்கு மஹாத்மாவான வாசுதேவன் திருக் குமாரராக அவதரித்தார். அன்று குளிர் மழை பெய்து, மீனாட்சி சுந்தரேஸ்வரர் "பிட்டுக்கு மண் சுமந்த திருவிளையாடல்" உற்சவமாக இருந்தது. குழந்தை பிறக்கும் வேளையில் தந்தை நாகராஜன் ஒரு அதிசயமான கனவு கண்டார். ஆகாயத்தில் ஒரு நட்சத்திரம் முதலில் பிரகாசமாக இருந்து, வர வர அது பெரியதாகிப் பூமிக்குச் சமீபம் நெருங்க நெருங்க அதில் ஸகல தேவர்களும் ரிஷி களும் சேர்ந்ததான ஒரு கூட்டமும், அதன் மத்தியில் சுப்பிரமணியசுவாமி மயில் வாகனத்தில் எழுந்தருளி வருவதையும் அவர் கீழே நெருங்கி வர வர சிறு ஜோதி-யாகித் தம் வீட்டின் மேல் புறம் வந்து மறைந்து விடடது உடனே கனவு கலைந்து கண் விழித்ததும் ஒரு சுமங்கலிப் பெண் வந்து "நாகமணி அம்மையாருக்கு ஜோதிப் பிரகாசம் போல் ஓர் ஆண் மகவு பிறந்துள்ளது" என்று சொன்னாள் மிக்க மகிழ்ச்சியும் வியப்பும் அடைந்த நாகராஜர் விரைவாகத் தன் குல குருவின் சமூகத்திற்குச் சென்று தன் குழந்தையின் ஜாதக பலன்களைப் பார்த்துச் சொல்லும்படி வேண்ட, அவரும் குழந்தையின் ஜாதகத்-தைக் கணித்து, இந்தக் குழந்தை பூர்வ ஜென்மத்தில் பிப்பலாதர், பிப்பிலி என்றரிஷி தம்பதிகளுக்கு 'வாசுதேவன்'

என் ற நாமத்தோடு பிறந்தவனே, இப்பொழுது சுப்பிரமணிய அம்சத்தோடு உமக்குக் குழந்தையாகப் பிறந்திருக்கிருன். நீ மிகவும் பாக்கியசாலி. இக்குழந்தை உலகத்தை உய்விக்க வந்தது என்று சொன்னுர்.

குழந்தைக்கு ஜாதக கர்மாக்களை வைதிக முறைப் படி செய்து, பதினேறாம் நாள் புண்யாஹாவனம் செய்து ''வாசுதேவன்'' என்று நாமகரணம் செய்து அன்புடன் வளர்த்து வருங்காலையில் குழந்தை பல பாலலீலைகளைப் புரியலாயிற்று.

வாசுதேவன் இரண்டு வயதுக் குழந்தையாய் இருக்கும் போது தாய் குழந்தைக்குப் பால் கொடுத்துப் படுக்க வைத்து விட்டுச் சமையலில் ஈடுபட்டிருந்தாள் அப்போது நாகராஜர் வந்து குழந்தையைப் பார்த்தார். அவருக்குக் குழந்தை வாசுதேவன்,பாலகிருஷ்ணன் போல் காக்ஷியளித்தான். அதை வந்து பார்க்கும்படி மனைவி நாகமணியை அழைக்க அவள் வந்து பார்க்கும் பொழுது முருகனுகக் காக்ஷியளித்தான். தந்தை நாகராஜன் ''கிருஷ்ணு, நாராயணு'' என்று சொல்லிக் கொண்டும், தாயார் நாகமணி 'முருகா, முருகா'' என்று சொல்லிக் கொண்டும் குழந்தையைவாரியெடுக்க, அது வாசுதேவனுக இருக்கக் கண்டு அதிசயித்து நின்றனர்.

ஒரு சமயம் பரமசிவன் மதுரையில் ஸ்மார்த்தப் பிராம்மண வகுப்பில் மானிடராய்ப் பிறந்திருப்பதால் அவரைத் தரிசிக்க வந்த நந்திகேஸ்வரர் நாகராஜன் வீட்டில் யாருக்குந் தெரியமால் சூக்ஷ்மமாக வந்து வாசு-தேவனைக் கண்டு நமஸ்கரித்துப் பரமசிவனின் அவதாரத் தைத் தெரிவித்துச் சென்றதும் வாசுதேவன் தன் பிதா பரமசிவனின் பெருமையை உலகோர் அறியும் பொருட்டு

*''ஆனந்த ரூபமே அடியார்களுக்காக அவனியில வதரித்தார்''*

*''மனமுதலிந்திரியங்கள் மருவியறியப்படா*
*தினகரன் போன்ற என் குரு பிரமானந்த தேசிகராய்''*

என்ற பாட்டை ஒரு ஏட்டில் எழுதி நாகராஜனின் படுக்கையின் கீழ் வைத்து விட்டு ஒன்றும் அறியாத குழந்தை போல் இருந்து விட்டார். பின் நாகராஜன் அந்த ஏட்டைப் பார்த்து இதை எழுதியவன் யாரென்று சிந்தித்துக் கொண்டிருக்கையில் தம் குலகுருவாகிய வேங்கடபதி சுவாமிகள் அங்கு வர, அந்த ஏட்டைக் காண்பித்ததும், அதைப் பார்த்துப் புளகாங்கிதமடைந்து. "உமது குலம் தழைத்து ஓங்கப் பரமசிவனே அவதாரம் செய்திருக்கிறார். அவருக்கு முன்னமே தமது மைந்தன் ஞான பண்டிதனை உமது இல்லத்தில் அனுப்பியிருக்கிறார். அவருடைய மகிமை இது" என்று சொல்லி ஏட்டைப் பத்திரமாக வைத்திருக்கும்படி ஆசீர்வதித்தருளினார்.

வாசுதேவன் சிறுவயதிலேயே ஸத்ய வந்தனாகவும் இரக்கம். காருண்யம் தான்சீலத்துவம் முதலிய கல்யாண குணங்கள் நிறைந்தவனாக விளங்கினான் வாசுதேவனுக்கு எட்டாம் வயதில் வைதிக முறைப்படி மிகச் சிறப்பாக உபநயனம் நடந்தேறியது. பின் தன் குலகுருவாகிப வேங்கடபதி அய்யங்காரிடம் முறைப்படி நான்கு வேதம், ஆறுசாஸ்திரம்,அறுபத்தி நான்கு கலைஞானங்கள் முதலிய வற்றையும், ஆயுர்வேதம், தனுர்வேதம், அர்த்த வேதம் முதலிய உபவேதங்களையும் குறுகிய காலத்தில் குற்றமறக் கற்றுத் தேர்ந்தார். இவர் தமிழ்,தெலுங்கு, ஸமஸ்கிருதம் ஆகிய மூன்று மொழிகளில் வல்லுநராயிருந்தார். இவருடைய நுண்ணறிவைக் கண்ட அறிஞர்கள் இவரை வேதாந்த தர்க்க கோஷ்டியில் அங்கத்தினராகச் சேர்த்து "பண்டிட்" என்ற பட்டத்தையும் வழங்கினார்கள்.

வாசுதேவனுக்குக் கிருஷ்ணய்யர் என்பவருடைய மகள்மஹாலெக்ஷிமி அம்மையாருடன் வைதிகமுறைப்படித் திருமணம் சிறப்பாக நடந்தது. சிறிது காலம் கழிந்தவுடன் பெற்றோர் பரமபதமடைந்தனர்.

வாசுதேவன் தன் மூதாதையர்கள் அனுஷ்டித்து வந்த விஸிஷ்டாத்வைத ரீதியாக சிறந்த வைஷ்ணவராக

விளங்கினர். இவருடைய திடகாத்திரமான சரீரத்தையும் வாக்சாதுர்யத்தையும், நுண்ணறிவையும் கண்ட அரசாங்கம் இவரைக் ''கொடிக்குளம்'' கிராமத்தில் ''நாட்டாண்மை'' என்ற பதவியைப் பலாத்காரமாகக் கொடுத்தது. இவர் தம் பதவிக் காலத்தில் தம் திறமையினல் உத்தங்குடி, கொடிக்குளம் என்ற கிராம மக்களுக்கிடையேயிருந்த சண்டையைச் சாம, பேத, தான தண்டம் என்ற முறையில் தீர்த்து வைத்தார்.

பின்பு ஒரு நாள் திடீரென்று ஆகாயவாணி ஒன்று கேட்டது. ''அறியாமையால் ஆசை உண்டாகிறது. ஆசையில் சிக்கிய மனதை விவேகத்தினல் திருத்த வேண்டும்.'' இதனுடைய தாத்பர்யம் யாதெனத் தம் குலகுருவாகிய வேங்கடபதி பட்டரிடம் கேட்க, அவர் தனக்குச்சரிவரத் தெரியவில்லைஎனச் சொல்ல,வாசுதேவன் நல்ல குருவைத் தேட வீட்டிலிருந்து புறப்பட்டான். அப்பொழுது ஆகாயத்திலிருந்து''ஜய விஜயீ பவ'' என்று ஒலித்தது. சற்று தூரம் சென்றவுடன் நல்ல மழை பெய்ய ஆரம்பித்து விட்டதால் இவர் தெற்காவணி மூலவீதியில் உள்ள காசுக்காரச் செட்டியார்களுடைய கோயிலை அடைந்தார். உடனே உள்ளேயிருந்து ஒரு சாது ஓடி வந்து தங்களை நம் சுவாமிகள் அழைக்கிறார் என்று சொல்லி அழைத்துக்கொண்டுபோனவர் உள்ளே போனவுடன் மாயமாக மறைந்து விட்டார். உள்ளே மேடையில் அமர்ந்து இருந்த அஸ்வத்த நாதஸ்வாமிகளிடம் அனுக்ரஹம் பெற்றார். அவர் சன்னிதியில் வேதாந்த சிரவணம் நடத்திக் கொண்டிருந்த இராமலிங்கசாஸ்திரி(பிரம்மானந்தருடைய பூர்வாசிரமப் பெயர்)களிடம் அஸ்வத்தநாத சுவாமிகள் வாசுதேவனை அறிமுகப்படுத்தித் தம் சிஷ்யனாக அங்கீகரித்துக் கொள்ளும்படி ஆக்ஞாபித்தார்.

வாசுதேவனை இப்பொழுது தினந்தோறும் சிரவணம் கேட்கலானர். பதின்மூன்று நாட்களில் அத்வைத

ஞானத்தின் கரையைக் கண்டவரானுர். பின் இராமலிங்க சாஸ்திரிகள் தீர்த்த யாத்திரைக்குப் புறப்பட்டுச் சென்ருர். வாசுதேவர் தம் குருநாதனின் பிரிவைச் சகிக்க முடியாமல் குருவைத் தேடிச் சென்று, குன்றக்குடியில் அவரைக் கண்டு சரணடைந்தார். இவருடைய தீவிர குருபக்தியைக் கண்டு இராமலிங்க சாஸ்திரிகள் இவரைக் குன்றக்குடி கோயிலுக்கு அழைத்துச் சென்று, அங்கு முறைப்படி "தத்வமஸி" மகாவாக்கிய உபதேசம் செய்து, இன்னும் ஒரு மாதத்தில் தான் மதுரைக்கு வருவதாகவும், இப்பொழுது வாசுதேவர் மதுரைக்குப் போய் சமாதிப் பயிற்சி செய்து கொண்டிருக்க வேண்டுமென்றும் அருள் பாலித்து, மதுரைக்கு அனுப்பி வைத்தார்.

மதுரைக்கு வந்த பின் வாசுதேவர் வைஷ்ணவ சின்னங்களைக் களைந்து விட்டுச் சைவ சின்னங்களை அணிய லானுர். இதைக் கண்ட இவரில்லத்தில் பஜனை செய்து வந்த பாகவதர்கள் இவரைப் பகைத்துக் கொண்டு 'ஸ்ரீ இராம நவமி' உற்சவத்தில் பஜனை செய்ய வரவில்லை. இவர் தம் குருநாதரையே ஸ்ரீ இராமராகப் பாவித்துப் பல கீர்த்தனைகள் இயற்றித் தம் சிஷ்யர்களுடன் ஸ்ரீ இராம நவமி உற்சவத்தைக் கொண்டாடி முடித்தார். இவருடைய பக்திப் பரவச மிக்க பாடல்களைக் கேட்ட பாகவதர்கள் தங்கள் பகைமையைக் கைவிட்டு இவருடைய சிஷ்யர் களானுர்கள்.

வாசுதேவருடைய குருநாதர் பிரம்மானந்தசுவாமி கள் விதேகமுக்தி அடைந்தபின் நம் சுவாமிகள் (வாசு தேவர்) பல சிஷ்யர்களோடு வில்லாபுரம் ரோடில் ஒரு இடம் வாங்கி சுவாமிகளை (பிரம்மானந்தரை) அடக்கம் செய்து, கோயில், கோபுரம் கட்டி "பிரம்மானந்த மடம்" என்று பெயர் வைத்து பாலானந்த சுவாமிகளை மடாதிபதி யாக ஆக்கி வைத்தார்கள். சில காலம் கழித்து நம் சுவாமிகள் தம் சிஷ்யர்களோடு பிரம்மானந்த மடத்தி

லிருந்து விலகித் தாம் சந்நியாசம் பெற்று விவேகானந்த சுவாமிகள் என்ற நாமதேயத்துடன் விளங்கியதுடன் நம் சமூக மக்களுக்காக ஓர் அத்வைதமடம்ஏற்படுத்த எண்ணி, திருப்பரங்குன்றம் ரோட்டில் பக்தர்களேயும் சிஷ்யர்களேயும் கொண்டு காலிமனே வாங்கி, அதில் மண்டபம், கோயில் கட்டி நம் சமூக அத்வைத வேதாந்த மடாலயம் ஆக்கி, அதை நிர்வகிக்கப் பதினெட்டு பேர்கள் கொண்ட ஓர் சபையை ஏற்படுத்தி, அதற்குச் ' சாது சேவா சமாஜம்'' எனப் பெயரிட்டுத் தம்சிஷ்யர்களில்ஒருவராகியகந்தாள்ளு கோபால சாமியைச் சந்நியாசியாக்கி, மடாதிபதியாக நியமித்து, சதாநந்த சுவாமிகள் எனப்பெயரிட்டுத் தாம் செய்து வந்தது போல் சதாகாலமும் சத்கைங்கர்யங்கள் செய்து நீடுழி காலம் வாழ ஆசீர்வதித்து இராக்ஷஸ வருஷம் வைகாசி மாதம் ஆறாம் தேதி வியாழக்கிழமை மக நட்சத்திரம் சுக்ல ஷஷ்டி திதியில் எழுபத்தெட்டாவது வயதில் தம் சுயசொரூபத்தில் லயமாஞர்கள்.

பிரம்மானந்த சுவாமிகளின் சிஷ்யர்களில் முக்கிய மானவர் நமது விவேகாநந்த சுவாமிகளே ஆவார். மற்றும் சச்சிதானந்த சுவாமிகள் என்னும் புளியடி. நாகேந்திர பாகவத சுவாமிகள், (தெடலாவுன்) தொப்பே. கிருஷ்ணசுவாமிகள், குடுவா. அழகர் ஆசார்ய சுவாமிகள் தொப்பே. சுந்தரராஜ பாகவத சுவாமிகள் முக்கியமான-வர்கள் ஆவர். சுருங்கச் சொன்ஞல் பிரம்மானந்த சுவாமிகள், விவேகானந்தசுவாமிகள் இவர்களுடையசிஷ்ய பிரதி சிஷ்யர்களே நம் சமூக ஞானிகளாகவும், பக்தர் களாகவும் ஆயிரக்கணக்கானவர்கள் இருக்கிறார்கள்.

ஓம் சாந்தி : ஓம் சாந்தி : ஓம் சாந்தி :

சுபம்

## எமது நித்ய சேவைகள் :

ஸ்ரீமத் ஸ்ரீ விவேகானந்த ஸ்வாமிகள் சிவலிங்க மூர்த்தியாகவும்
ஸ்ரீமத் ஸ்ரீமஹேஸ்வரானந்த ஸ்வாமிகள் கணேசமூர்த்தியாகவும்
ஸ்ரீமத் ஸ்ரீ ப்ரக்ஞானந்த ஸ்வாமிகள் பாலசுப்ரமண்ய மூர்த்தியாகவும்
ஸ்ரீமத் ஸ்ரீ சதானந்த ஸ்வாமிகள் நந்தீஸ்வர மூர்த்தியாகவும்
ஸ்ரீமத் ஸ்ரீ அத்வைதானந்த பாரதி ஆச்சார்யஸ்வாமிகள் தக்ஷிணாமூர்த்தி மூர்த்தியாகவும்
ஸ்ரீமத் ஸ்ரீ சொரூபானந்தஸ்வாமிகள் தண்டாயுதபாணி மூர்த்தியாகவும்
ஸ்ரீமத்ஸ்ரீபரமானந்தபுரிஆச்சார்யஸ்வாமிகள் லிங்கமூர்த்தியாகவும்

அமைந்துள்ள அதிஷ்டானங்களிலும் ஸ்ரீ சாரதாதேவி சந்நதியிலும் தினசரி நடக்கும் திரிகால பூஜைகளில் கலந்து கொண்டு அருள்பெற வேண்டுகிரேும்.

நம் மடாலயத்தில் தினசரி மாலையில் வேதாந்த சிரவணமும் நடைபெறுகின்றன. ஸ்வாமிகளின் ஜெயந்தி குருபூஜைகளும் ஆஷாட பௌர்ணமியன்று ஸ்ரீ வியாஸ பகவான் பூஜையும் மிக்க விமரிசையாக நடைபெறுகின்றன. இரு மாதத்திற்கொருமுறை அந்தர்யோகம் வெகு சிறப்பாக நடைபெறுகிறது.

மடாலயத்தின் சார்பாக நமது ஆபீஸ் 42, மஹால் 1வது தெரு, ஆனந்தாஸ்ரமத்தில் தினசரி காலை மாலை ஹிந்தி, ஸம்ஸ்கிருத வகுப்புகள் இலவசமாக நடைபெறுகின்றன.

பயன் பெறுக!

தங்களன்புள்ள,

Dr. R.L. ஹனுமந்தன் M.D.
தலைவர்

திரு. K.S.R. இராமகிருஷ்ணய்யர்

திரு. K.E. சுந்தரராமன், Ex.M.C.
பொக்கிஷதார்

திரு. O.K. ராஜாராம்
கௌரவ காரியதரிசிகள்

நிர்வாக அங்கத்தினர்கள்

திரு. C.K. நரசிம்மாச்சாரி
திரு. T.K. லெக்ஷ்மணய்யர்
Er. T.V. பாலகிருஷ்ணன் B.A.B.E.,
திரு. Pu. நாட்டாமை. D. சாம்பச்சிவன்
திரு. M.V. ராஜாராம் B.A.B.L.,
திரு. J.V. ராஜாராம்
திரு. M.M. ஹரிகிருஷ்ணன்

# மதுரை சாது சேவா சமாஜம்
# ஸ்ரீ விவேகானந்த சுவாமிகள் மடாலயம்

## நிர்வாகஸ்தர்கள் 1988 - 1991



முன் வரிசை இடமிருந்து வலம் : திரு T.K லெக்ஷ்மணய்யர் நிர்வாகஸ்தர் திரு.O.K. ராஜாராம் காரியத்ரிசி
திரு. K.E. சுந்தரராமன் Ex. M.C. பொக்கிஷதார் Dr. R.L. ஹனுமந்தன் M.D. தலைவர்
திரு. K.S.R. இராமகிருஷ்ணய்யர் காரியதரிசி திரு. C.K. நரசிம்மாச்சாரி நிர்வாகஸ்தர்

பின் வரிசை இடமிருந்து வலம்: நிர்வாகஸ்தர்கள் : திரு. J.V. ராஜாராம் திரு. Pu. நாட்டாமை. D. சாம்பச்சிவன்
திரு. M.V. ராஜாராம் B.A.B.L., திரு. M.M. ஹரிகிருஷ்ணன் Er. T.V. பாலகிருஷ்ணன் B.A.B.E.,

ஓம் . . தத் . . ஸத்

## வேதாந்த சாரமென்னும்

# பிரமானந்தக் கீர்த்தனை

### இராகம்-சங்கராபரணம்-தாளம்-ஆதி.

பல்லவி

குருபஜனைசெய்வாய் ஓமனமே
குறைவில்லை யனுதினமே

அநுபல்லவி

கருணை மிகுந்த கடல் போலேயந்த
கிருபைகூர்ந்து காக்கும் பிரமானந்த (குரு)

சரணம்

துன்பந்தனை நீக்கித் துணிவுறசாக்ஷியென்று
இன்பந்தனைக்கொடுத்து ஏகரஸமாக்கி
தென்பாய்பிரமம்நீயென்று தெவிட்டாதானந்தம்தந்து
அன்பாயாதரவுடன் அஸ்வத்தனருள்பெற (குரு)

சுந்தரமாம் சுருதி சிரவணங் கேட்டுநிதம்
சந்தேகவிபரீதம் சீக்கிரம்போக்கும்போதும்
எந்தநேரத்திலும் ஏகமே பிரம்மமென்று
சிந்தைமகிழும்ஸ்ரீ ஆண்டவரன்புற (குரு)

ஆதரவாகவே ஆத்மா நானென்றறிந்து
ஏதொருகளங்கமு மில்லாமலே யிருந்து
ஆதியந்தமற்று அண்டமெல்லாம் நிறைந்து
ஸாதுபாலானந்த சன்னதிமுன்னின்று (குரு)

---

### இராகம்-பைரவி-தாளம்-ஆதி

பல்லவி

உடலாலிதுநாள்வரைக்கும் உனக்கென்ன உபகாரம்
ஒன்று சொல்லாய் மனமே

அநுபல்லவி

கடலலே போல்வந்த காயங்கள் கணக்குண்டோ
கற்பந்தோறுமென்ன காரியங் கண்டாயிந்த (உ)

சரணம்

அஸ்திகடிக்கும் நாய்தன் வாயிற்பிறந்த ரத்தம்
அஸ்தியிலென்னும் பிரமையாளுற்போல்
சத்தியஞானனந்த சௌக்யத்தை வேருக்கி
ஜடலத்தின் மேல்வைத்துப் பார்க்கிருயோ
புத்திசாலியென்று புகழ்ந்துகொண்டேனுன்னே

புழுமலவியாதிகள் வைக்கக்கூடு மாச்சுது
புத்தியிலேயுனக்குட லாசைபோட்டுக் காச்சுது
நழுவுமஞ்ஞானமு நலமறுந்து தேய்ச்சுது
நாறுமுடலுதவிகள் செய்து பொய்த்துப்போச்சுது (உ)

மண் குதிரையைநம்பி மடுவிலிறங்குவார்போல்
மதிகெட்டுப் போனுயுன் னதிஷ்டந்தானே
விண்முதலாமைந்து பூதவிகாரமென்று
வேறுபதேசங்கள் வேணுமோ
கண்குடத் துள்ளடைத்த காற்றுக்கவதியுண்டோ

காலன் வரும்போதுடல் காரணத்தில் விழுந்ததும்
கர்மமானபின்னுன்னேக் காயம்விட்டுக் கழிந்ததும்
நாலுபேரும் பார்த்திதுஞாயமென்று மொழிந்ததும்
நல்வரமாமுட லுனக் கென்னதந்துகிழிந்தது (உ)

வெள்ளரிப்பழம்வெகு காலமிருக்குமென்று
வெடிக்காமல் பூண்கட்டி வைப்பார்போல்
கள்ளத்தனமாய்வந்த காயத்தைப் போஷித்துக்
காலனுமுண்டோவென்று களிக்காதே
தள்ளக்கூடாததால் தானவனுகையால்

தன்னேயறிந்தறியாமல் ஜன்மமெடுத் திறந்ததும்
தானேகுருபிரம்மானந்தர் சொன்னவுண்மை
மறந்ததும்
கன்றைவிட்டுக் கால்பிடித்துக் கற்பசுவைக் கறந்ததும்
காயமுனக்கிப்போதுப கரித்தென்ன துறந்ததும்

## இராகம்-கரகரப்பிரியா-தாளம்-ஆதி

பல்லவி

மாயவாழ்க்கையிதை நம்பாதே இந்தக்
காயம் நிலையாதே சொன்னேன்

அநுபல்லவி

நீயா ரென்றெண்ணிப் பாராம லந்த
நிஜந் தெரிந்தவனைப் போல் சாராமலே
தாயார் வயிற்றினி லின்னமும் பிறக்க
தானே வாழுயிர் தேனே ஹரிஹரி (மா)

சரணம்

பதினாயிரம்பொன் தேடிவைத் தாலும்
பட்டுபட்டாடைகள் வேணுமென்றுடுத்தால்
அதிகாரம் போய்ப் பாயினிற் படுத்தால்
ஆழுங்காணு காலங்களியிப்போ (மா)

போகபோக்கியம் அமரா மூச்சு
போனால் போச்சு பெண்டுகள் பேச்சு
தேகமெல்லாம்பிடி சாம்பலா யாச்சு
தெருவினிற் பேசிய பழங்கதை யாச்சு (மா)

தேகமெல்லாம் பொய் யிந்திர ஜாலம்
தன்னையறிந்தபின் நானென்ன கோலம்
பலவித நூல்களி லேனிந்த சீலம்
பாலசுவாமி சொல் வேணு மதிகாலம் (மா)

---

## இராகம்-தன்யாசி-தாளம்-ஆதி

பல்லவி

ஞானசற்குருவை நாடு மனமே நீ
நிர்மல சுகமுண்டு பாரு

அநுபல்லவி

ஆதியானதுக்கம் அனைத்தையும் போக்க
ஆனந்தக் கடல்வடி வாகவே நிற்க (ஞா)

சரணம்

இந்திரஜாலமே உலகவை போகம்
இன்றைக்கிருப்பது வோசந் தேகம்
அந்தர மின்னல்போ லழியுமுன் தேகம்
அய்யோ அதனுட னுனக்கென்னஸ் நேகம் (ஞா)

தனதான் யமுத லான சம்பத்து
சாஸ்வதமோ வதற் காயிரந் தத்து
தினமுங்கவலையை விளைந்திடும் வித்து
சீச்சி யதனை விரும்பல்வி பத்து (ஞா)

மெய்யோ ஒன்றுக்கும் உதவாப் பண்டம்
மிருகாதிகள் சூழு மாமிசப் பிண்டம்
மெய்யா யிதற்கிங்கு நித்திய கண்டம்
மீதுவைத்திடுமாசை மேவிடாத்துன்பம் (ஞா)

சிருஷ்டிக்கு முன்னும் பின்னும் நீ சத்து
சிருஷ்டியனைத்தையுங் காண்பதால் சித்து
முத்திதருங் குருபிர மானந்தரை யொத்து
மோகந்தீர்ந்து திவ்ய ஞானத்தை யுற்று (ஞா)

---

## இராகம்-மத்தியமாவதி-தாளம்-ஆதி

பல்லவி

இந்தவேளையி லறியாம லுனை நீ
எந்த வேளையி லறிவாய்

அநுபல்லவி

அந்தமாகிய மானிட ஜென்மம்
அரிதல்லவோ பிறப்பிலையையோ (இ)

சரணம்

சாஸ்திரம் பல கோடி யிருக்குது
சாதனம் நன்ருய் நா லிருக்குது
நேத்ராதி கரணங்க ளுண்டடா
நேர்த்தியான விவேக முண்டடா

பாத்திரம் நீ பருவமடா—இந்தப்
பாருக்குள் பெரியோ ருண்டடா
சூத்திரதாரிபோ லிருக்குதே—உந்தன்
சொரூப மாவிர்த்தி மறைக்குதே (இ)

காரண கார்யங்கள் தோணுதே—இந்தக்
காயமும் வேருய்க் காணுதே
ஆரணம் பொய்சொல் லாதடா
ஆத்மா நீதானே யாமடா
பூரணமாய்ப் பொங்குதே—இந்தப்
பொல்லாத ஜன்மம் நீங்குதே
தாரணி யெல்லாந் தயங்குதே—அது
தன்னை யறியாமல் மயங்குதே (இ)

ஓடமிருக்கிற போது வேணும்
உடலுக்குக் காலன்வாது காணும்
பாடாமலெல்லாம் பாடுதடா—நூல்
பாதகா முத்தி கூடுதடா
மூடபுத்தியைத் துறத்தடா—ஜீவன்
முத்திவழியில் மனம் நிறுத்தடா
கூடஸ்தராமீசர் சிரிக்கிருர் எங்கள்
குருபிரமானந்த ரிருக்கிருர் (இந்)

---

இராகம்—புன்னுகவராளி—தாளம்—சாப்பு

பல்லவி

தன்னையறிந்தேனே தானனந்த மானேனே

அநுபல்லவி

தன்னையறிந்தேன் தலைவனையு மறிந்தேனே
தலைவனுந் தானு யிருக்கின்ற (த)

சரணம்

அன்னமயந்தனிலே யறிவாகா சமானேனே
சென்ற வயதுக்குள்ளே நான் சேஷித்து நின்றேனே

சொன்ன விகாரத்தில் சேராமற் றன்னிலும்
பின்ன மில்லாதொரு பிரமந்தானுகிய (த)

பாவியுடல் தனிலே நான் பற்றுதிருந்தேனே
தாவி வெளிதனிலே நான் ருனேவீற்றிருந்தேனே
ஆவியிக்குள்ளே யறிவாயறிந் தென்னே
மேவிப்பதங்களில் மேலா யிருக்கின்ற (த)

கள்ள விஷயமெல்லாம் நான் கட்டோடவேரறுத்தேன்
கள்ளியைக் கண்டுகொண்டேன் அவளுட்கபடமறிந்து கொண்டேன்
தள்ளிக் கதவடைத்தேன் தானே பிரமானந்தர்
பள்ளிக்கூடந்தன்னில் பாங்காய்ப் படித்துநான் (த)

---

இராகம்-பியாக்கு-தாளம்-ஆதி

பல்லவி

பூரண மானேன் பிரமானந்தா
ஆரியனருளா லசையாமல் (பூ)

அநுபல்லவி

காரணமாகக் காரியமிறந்து தீரமாயிருந்தேன்சிவமாக
தாரணி யிழந்தேன் தன்மயவடிவாய்
வேறுரு மறந்தேன் வெளிபோலே (பூ)

சரணம்

சஞ்சலமிறந்து தன்மயவடிவாய்
அஞ்சையுமறந்தே னனுதினமும்
மிஞ்சின பொருளாய் முத்திசுகத்தில்
வஞ்சப் பிறவியற்று வானுருபோல் (பூ)

அம்புதிபோல அகண்டவடிவாய்
பிம்பமற்றருளும் பொருளாகி
கம்பத்தில் சோரன்போல் காணும் பிரபஞ்சத்தை
அம்பரநிலமென் றறிவாகி (பூ)

சொல்லும் பொருளற்று சொரூப சுகத்தில்
அல்லல் வினைகளற்று அறிவாகி
பொல்லா மனச்சிந்தை போக்கிப்பிரமானந்த
உல்லாசமாக நின்றேன் உயர்பாதத்தில் (பூ)

சிந்தையிழந்து சின்மயவடிவாய்
பிரமானந்தர் பதந் தொழுது சதா
எந்தன் வடிவா யிருபொருள் மறந்து
சந்தத மிருந்தேன் தானுக (பூ)

---

விருத்தம்

காடுங்கரையுமனக்குரங்கு கால்விட்டோட வதன்பிறகே
ஓடுந்தொ ழிலாற் பயனுளதோ ஒன்ருய் பலவாயுயிர்க்
குயிராய்
நாடுங்கருணை பரஞ்சோதி யருளைப் பெறுதற்கன்பு நிலை
தேடும்பருவ மிதுகண்டீர் சேரவ ாரீர் செகத்தீரே.

சைவசமய மேசமயம் சமயாதீதப் பழம்பொருளைக்
கைவந்திடவே மன்றுள்வெளி காட்டுமிந்தக் கருத்தைவிட்டு
பொய்வந்துழலும் சமயநெறி புகுதவேண்டா முத்திதரும்
தெய்வசபையைக் காண்பதற்குச் சேரவாரீர் செகத்தீரே.

காகமுறவு கலந்துண்ணக் கண்டீரகண்டா காரசிவ [மாய்
போகமெனும்பே ரின்பவெள்ளம் பொங்கித் ததும்பிப் பூரண
ஏகவுருவாய்க் கிடக்குதையோஇன்புற்றிடநாமினியெடுத்த
தேகம்விழுமுன் புசிப்பதற்குச் சேரவாரீர் செகத் தீரே.

பொன்னில மாதராசை பொருந்தினர் பொருந்தாருள்ளம்
தன்னிலந் தரத்திற்சீவ சாட்சி மாத்திரமாய் நிற்கும்
எந்நிலங்களினுமிக்க எழுநிலமவற்றின் மேலாம்
நன்னிலமருவுமேக நாயகன் பதங்கள் போற்றி

ஐயனே யெனதுள்ளேநின் றனந்தஜென்மங்க ளாண்ட
மெய்யனே யுபதேசிக்க வெளிவந்த குருவேபோற்றி
உய்யவே முத்திநல்கு முதவிக்கோருதவி நாயேன்
செய்யுமாறென்றுங் காணேன் திருவடிபோற்றி போற்றி.

---

இராகம்-கமாசு-தாளம்-சாப்பு

கண்ணிகள்

கருணை நிதியாங் குருவோடருளுக்குக்
கைமாறென்றும் காணேனே — கரு

மறையின் மொழியும் பிரமம் உருவாய்
வரவுமருளாலே தரவும் பிரமானந்தம் — கரு

தன்னை நினைந்திடச் சொன்னமொழிதன்னை
நன்றாயறிந்தெங்கு மொன்றாநிறைந்தபின்னே — கரு

உடலைமறந்து அறிவாய் நிறைந்து
பரமாயறிந்த தெல்லாந் திறமாய்த்தன்னிலையிலே — கரு

ஆசானருள் செய்த பேசா நிலைதன்னில்
ஈசன்றானென்ற சொல்லும் வாசாமம் பணமாகி — கரு

சிந்தையொழித்தெங்கும் சிவமாய் நிறைந்தில்
வந்ததிவ்வானந்தம் பிரமானந்தனருளால் — கரு

விருத்தம்

கருணபரஸ்கரன்போல் கருணையாலந்தக்
கரணமோகத்தைக் கடத்தியுள்விளக்கும்
பிரணவப்பொருளாம் பிரமவானந்தன்
சரணபங்கயத்தைத் தலைக்கணிந்தொளிர்வாம்

வந்ததோர் ஸ்தூலந்தன்னில் வான்முதல் பூதத்தம்ஸம்
எந்தெந்தரூபமாக விருக்குமோ வதனை நன்றாய்
எந்தனுக்குரையுமென்ற வினியதோர் சீடனுக்குச்
சிந்தையின் கலக்கந்தீரத் தேசிகருரைக்கின்றாரே.

---

## இராகம்-சஹாநு-தாளம்-ஆதி

பல்லவி

தெங்கொஜனி தெனெமீ ஹொயெஸி-மத்குருகிருபஹால்
கொங்கிடும் மீபொரி ரியேஸி

அநுபல்லவி

ஸங்குனுஸ்தக்களானரே ஸங்கெஹாலிம் ஹொவானரே
ஸங்கெதானுக் அப்யாஸ்கரேத் ஸர்வமுபொரி ரியெ. (தெ)

சரணம்

அஸ்கிதெனு மீமீமென ஸ꠱ன் த்யெமீ
கோனுமெனி ஜனன் செக்கனின்
அஸ்மி அஹம் பிர்ம்மம் மெனி
அர்து யெஜ꠱ர் வேதும் ஸங்கே
விஷ்ணுவாதி மூர்த்தின் ஜொவள்
மீவினெக நீனு கொன்னி (தெ)

கோஸமு பாஞ்சுமு மீமிளி கோட்கோட்கி
மோஸ꠱க ஜெலுமுன்கடேசி தெனெமீநா
பாஸமு தொடி ஹெடெசிதா
காஸ꠱டுக் கைக்யம் கரி
வாஸனதுட்டெ ஹாலிமு
மோஸ꠱ நீனு கொப்பிமு மொகொ (தெ)

குருபிரம்மா நந்துல் ஸங்கெயெ
குருத்துகனி சாருவேது அர்த்துஏளஸி
மாருபாடு நாரெ ஏ எ
ஸாரே தொரெ ஸொரூப்ஜனி
பாருநாரெ தொகொ ஸங்கே
சராசரம்மு பொரி ரியெ (தெ)

## இராகம்-சங்கராபரணம்-தாளம்-சாப்பு

பல்லவி

என்னென்று நான் சொல்லுவேன்
ஏகசுகத்தை (எ)

அநுபல்லவி

ஒன்றென்றும் பலவென்று முரைக்குமொழியெல்லாம்
பின்னமில்லாம லபின்னமாய்க்காணுது (எ)

சரணம்

சூதென்றும் வாதென்றும் சொல்லுமொழியெல்லாம்
பேதமொன்றில்லா அபேதமாய்க்காணுது (எ)

தானென்றும் பிறரென்றும் சாற்றுமொழியெல்லாம்
ஆனந்தமாகவே அனுதினங்காணுது (எ)

அதுவென்றுமிதுவென்றும் அறையுமொழியெல்லாம்
சிதானந்தரசமாகச் சிந்தையிற்காணுது (எ)

இல்லையுண்டென்று இரண்டிரண்டாகவே
சொல்லுமொழியெல்லாஞ் சொரூபமாய்க்காணுது (எ)

பந்தமோக்ஷமற்ற பிரமானந்த சொரூபரே
சிந்தைவிற்குடிகொண்டு எனையாளும் விதத்தை (எ)

---

## இராகம்-பூரிகல்யாணி-தாளம்-சாப்பு

பல்லவி

சாரட்டு மேலேறிப் போவோம்—எங்கள்
சாமியைத் தெரிசித்து வருவோம்

அநுபல்லவி

பாரெட்டும் சாணெட்டும் பறக்குங் குதிரைரெண்டு
ஏரிட்டுப் பார்க்குமுன் னீரேழுலோகஞ் சுற்றும்(சா)

சரணம்

பஞ்சதன் மாத்திரைக ளுண்டு—பிர
பஞ்சமெல்லா மங்கே யுண்டு

நெஞ்சிற் கடிவாளத்தை நேராய்ப் பிடித்திரண்டு
கண்சிமிட்டு முன்னே காணலாம் சகலமும் (சா)

பிராரத்த கர்மத்தைத் துலைத்து—துஷ்ட
ஆறுவிகாரத்தை வெறுத்து
ஆறுபலமுந்தாண்டி யம்மா சத்திரந்தாண்டி
போர வழிக்குத்துணை புவனநாதனை வேண்டி (சா)

காஞ்சித பலமெல்லாம் கொடுப்பார்—சிவ
ராமதாசர் பங்கி லிருப்பார்
கோமள மாகிய லிங்கதரிசனம்
கொண்டாடுவோந்தேய குசநாயகியுடன் (சா)

---

இராகம்—நாதநாமகிரியை—தாளம்—ஆதி

கண்ணிகள்

சீர்பெருகும் சச்சிதானந்த மாகிய
சின்மயனே குரு நாதா
பார்முழுதும் பரமாகிநிறைந்தவென்
பாக்கியனே குரு நாதா

ஆரறிவாரெனக் கருளியவனுபவம்
ஆண்டவனே குரு நாதா
பேரறிவாகிய பிரமநிலக்கடை
பேசறியேன் குரு நாதா

அந்தகன்போலவே யலைந்துதிரிந்தவென்னை
ஆண்டவனே குரு நாதா
சிந்தை மகிழ்ந்திடச் சிவபதமருளிய
சேதனனே குரு நாதா

பந்தமோக்ஷமென்றும் பேசறியாதொரு
பேதை யல்லோ குரு நாதா
சந்தத மனுபவ மாகவேதாந்தத்தைச்
சாற்றி வைத்தாய் குரு நாதா

மரமேறிக்கை விட்ட மானிடர்போலவே
மாண்டு பிறவாமல் நாதா
திரமெனக் கீந்ததுந் தேவரீரல்லவோ
தேசிகனே குரு நாதா

சரசப்பேச்சில் சச்சிதா னந்தநிலைதந்த
சாமியல்லோகுரு நாதா
பரமரகசியப் பதமருள்செய்பரி
பூரணனேகுரு நாதா

நித்ய நிரஞ்சன நிர்மலமாகிய
நிற்குணனேகுரு நாதா
சத்யஞானனந்த சமரசமாகிய
சாஸ்வதனேகுரு நாதா

புத்திக்கு சாக்ஷியாய் போதமதாகிய
பூரணனேகுரு நாதா
பத்திவைராக்கிய மழமறை நூல்களின்
பழம்பொருளே குரு நாதா

முத்திபரமசுகம் தன்னுக்குள்ளே தானே
முன்னமேயிருந்தாலும் நாதா
அத்திக்கு சாக்ஷியாய் அறிகிறவனுபவம்
ஆர்தருவார்குரு நாதா

சுத்தியில்ரஜதம்போல் தோணும்பிரபஞ்சமென்று
சொல்லுமையாகுரு நாதா
யுத்தியனுபவங்கள் சொல்லியுலகப்பேயை
யொழிக்குமோ நூல்குரு நாதா

நிர்விஷயானந்தம் நிலையெனக்கீந்ததும்
நீரல்லவோகுரு நாதா
துர்விஷயங்களைத் தூளாக்கியவெனது
துரையல்லவோகுரு நாநா

சர்வமுந்தானய்ச் சமரசபதந்தந்த
சாமியல்லோ குரு நாதா
பர்வதமாம்பிரதி பந்தமறுத்ததுன்
பாதமல்லோ குரு நாதா

காசம்படர்ந்த கண்ணைக் கடுவெளியாக்கிவைத்த
காரணனே குரு நாதா
நாசம்பிறவியில்லா நாடெனக் கருளிய
நாயகனே குரு நாதா

பாசமகற்றி யென்னைப் பதிதனிற்கூட்டிவைத்த
பண்டிதனே குரு நாதா
தேசம்புகழும் பிரம்மாநந்தராம் எங்கள்
தேசிகனே குரு நாதா

அடிமுடிநடுவின்றி அண்டமுழுதும்ஞான
வடிவாய்நிறைந்தவர்க்கு மங்களம் சிவ
னடியாரைக் கூட்டிக்கொண்டானந்தவெளியிலே
குடியாயிருப்பவர்க்கு மங்களம் எங்கள்
குருபிரம்மாநந்தருக்கு மங்களம் எங்கள்
அஸ்வத்த நாதருக்கு மங்களம் எங்கள்
முத்துராமலிங்கருக்கு மங்களம் எங்கள்
சஸ்ஸகாய சுவாமிக்கு மங்களம் எங்கள்
விவேகாநந்த சுவாமிக்கு மங்களம் எங்கள்
சாதுசங்கத்திற்கு மங்களம் நித்யமங்களம்

---

### இராகம்-தர்பார்-தாளம்-சாப்பு

பல்லவி

ஜெகத்துமுழுவதும் பொய்யானல் பின்
ஜெனன மரணமேது

அநுபல்லவி

அகத்த அருள்வினை தகத்த சோகம் வாடி
மகத்துவ மானபின் நகைக்கும்படி யான (ஜெ)

சரணம்

குருடன்கூத்துப் பார்க்கச் செவிடன் கீதங்கேட்க
முடவன் னடன மாட
கரமில்லா தவன்கைத் தாளம் போடவும்

கருத்துடனூமை பாட
நரிக்குக் கொம்புவந்து வர வர வளரவும்
நாகன் கெருடன் மீத இந்த
பரமரகசியத்தைப் பார்த்ஞானிகளுக்கு
அறிவுக்குள்ளறிவா யானந்தந் தாஞய் (ஜெ)

மலடி தனையனுக்கும் மரித்த புருஷனுக்கும்
மடிபிடி சண்டையிலே
தலையில்லாத சூரன் முலையில்லாதபால்
குடித்தவன் வருகையிலே
புலியின் கூட்டத்தில் பசுவந்து விழுந்ததும்
பொய்யோ மெய்யோ
எலியும் பூனைகளு மெதிர்த்துச் சண்டைபோட
முயல் கொம்புமுனை பாய்ந்து கஜம் விழுந்ததைக் கண்டு
(ஜெ)

கவலை மெத்ததிரு கருமத்தினுல் வந்த
கண்வலி போத்தாதோ
பவக் கடலே கடல் குருபரமே கப்பல்
பவித்ததும் போதாதோ
சிவராம குருதாசன் சொன்ன வழியதாய்
சோகம் சிவோகம் அஜபம் பிரமம். (ஜெ)

---

## இராகம்—புன்னுகவராளி—தாளம்—ஆதி

### கண்ணிகள்

ஆனந்தோஹம் ஆனந்தோஹம் ஆனந்தோஹம் மத்குரு
அரஸப்போஹம் அரஸப்போஹம் அரஸப்போஹம்

சத்குருவின் பாதமலர் தியானம் பண்ணவே
சந்ததமும் அன்னைவாணி முன்னடக்கவே
ஆலடியிலே வசித்த ஆதி வன்துவே
அடியார்பந்தம் தீர்க்கவேண்டி அவனி தன்னிலே

வந்துதித்த ரூபந்தன்னை பிரமானந்தராய்
சிந்தையிலே நான்தெளிந்தேன் சின்மயமாக

பிரத்யேகாத்ம பிரமமென்ற பேதங்கள் ரெண்டும்
ஏகமென்று யுத்திசொன்ன எந்தன் குருவை

போற்றிசெய்து வேறுருவாய் விரிந்த பேதத்தைத்
தீர்த்தெங்கும் சித் ரூபமாகப் பார்த்தபிற்பாடு

கடலதனிற் காற்றினாலே கணங்களாகவே
கடலிற் றோன்றிக் கடலதனி லயிக்குமாபோல

ஆனந்த சாகரந்தன்னி லவித்தையாங் காற்று
வீசியிந்த ஜகத்தெல்லாந் தோன்றிமறைக்கும்

அவித்தையென்ற வாயுவற்று அறிவுமயமாய்
அம்புதிமாத் திரமதாகி ஆத்மரூபமாய்

அருமறைகள் முதலாதி பிரணவமந்திரம்
அநேகங்களை கற்றபோதும் ஆத்மாவைக் காணார்

எட்டுவித யோகந்தன்னை யிஷ்டமுடனே
திட்டமாகப் பண்ணினாலும் எட்டவேமாட்டார்

விள்ளொணாத வித்தைகளை விரும்பிக் கற்றாலும் எங்கள்
வள்ளல்குரு நாதரரு ளில்லாமற்போனால்

வன்னியை விழுங்கினாலும் வாருதிநீரை
வற்றவே குடித்தபோதும் இத்தையறியார்

பாவனாத்ரியங்களினால் பந்தமடைந்து
பரமார்த்த சொரூபத்தைப் பார்க்கவேமாட்டார்

பரிசுத்தவேதசீலன் நானேயென்றும்
பவிசுரெம்பவும்மடைந்து பரமமூடனாய்

மோகமலை தன்னிலேறி தெய்வலோகத்தில்
போகமுண்டு என்றுஎண்ணுந் தாகத்தினாலே

இகபராதி லோகந்தன்னில் இச்சையைவைத்து
எண்ணரிய கோடிஜன்ம மெடுத்துமறியார்

ஆனலித்தை யாரறிவா ரென்று சங்கித்தால் எங்கள்
ஆரியனருளைப் பெற்ற பேர்களறிவார்

மதியில்வெகு யுத்தியற்ற மந்தனுனலும்
மடமையெல்லாம் நீங்கிநல்ல திடஞானமுண்டாம்

இந்தவகைக் கொருயுத்தி சொல்லக்கேளும்
சந்ததம் நினைந்தபுழு தும்பியானற்போல்

ஐந்துவித விருத்தியால் அநுஷ்டிதமான
ஆதிகாரண குருவை அன்யமென்னமல்

எப்பொழுதும் சிந்தைசெய்தால் இந்தமனதில்
எப்படியோ அந்தரூபம் அப்படியாவார்

அஸ்தியாதி பிரியரூப மானவஸ்துவை
ஸைத்யம்வெண்மை நிகழ்ச்சிபோல பேதமற்றுரே

தேசகாலவஸ்து பரிச்சேத மில்லாத
பிரம்மாநந்தரூபமாகச் சிந்தனைசெய்தால

சிந்தையில் வணக்கத்துடன் வந்தனம்செய்தால
எந்தப்பொருள் கண்டபோதும் ஏகமாயக்காண்பார்

இறப்புபிறப்பு என்றுமற்று ஏகமாகவே
எங்குமந்த பிரம்மயமாகச் சுகிப்பார்.

---

## இ-ம்-காப்பி-தா-ம்-சாப்பு

பல்லவி

குருவே யுனை நம்பினேன் கிருபை செய் பிரமானந்த (கு)

அநுபல்லவி

பரிபூரணனந்த பரம தயாள சற் (கு)

சரணம்

நித்தியானந்த வாசா நிர்க்குண ஜெக தீசா
சுத்தஞான தேஜா சுயமான பிரகாசா (கு)

கிட்டரிந்து மணவாக்குக் கொட்டாமலே யெவர்க்கும்
வெட்டவெளியாய் நிற்கும் விதிநிஷேதமற்றிருக்கும் (கு)

ஆதி யந்தமில்லாம லறிவா யெங்கும் நிறைந்த
சோதிமயமான சுவாமி பிரமானந்த (கு)



